Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



### இதயக் கனி

கனி ஒன்று என் மடியில் விழுந்தது. அதனை எடுத்து என் இதயத்தில் வைத்துக் கொண்டேன். அவர் தான் எம். ஜி. ஆர்.

-பேரறிஞர் அண்ணா


# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்


### பெரிய மனசு

எம். ஜி. ஆருக்கு ரொம்பப் பெரிய மனசு. என் மேலே ரொம்பப் பிரியம். ஏழைகளுக்கு உதவும் கருணை உள்ளம் கொண்டவர்.

-தந்தை பெரியார்



மலர்:7 சென்னை 3-4-83 ஞாயிறு வெளியூர் 4-4-83 திங்கள் இதழ்: 165

## முக்கடலின் சங்கமமோ? மூவேந்தர் படைகுவிப்போ? அல்ஜீரியச் சேனையின் அணிவகுப்போ?

## உரிமைக்குரல் எழுப்பி - உண்மை நிலை விளக்கி

# லட்சோபலட்சம்பேர் பேரணி

## கொளுத்தும் வெயிலிலும் குவிந்த கொள்கை மறவர்



### ஊர்வலம் வந்த கழகத் தொண்டர்களுக்கு மோர்- நீர் கொடுத்த தாய்மார்கள் பரிவு



**சென்னை, ஏப். 3-** முக்கடலின் சங்கமமோ, மூவேந்தர் படை குவிப்போ, அல்ஜீரியச் சேனையின் அணிவகுப்போ என்று பார்ப்போர் வியக்கும் வண்ணம் கழகச் செயல்வீரர்களும், மன்ற மறவர்களும் லட்சோப லட்சம் பேர் இன்று சென்னைப் பேரணியில் பங்கேற்றனர்.

நமது உரிமைக்குக் குரல் எழுப்பியும், உதவியைத் தாமதப்படுத்தும் மத்திய அரசின் போக்கை விளக்கியும் நடந்த இந்தப் பேரணிக்கு பொதுமக்கள் விருந்த உற்சாக வரவேற்பை அளித்தனர்.



தியாகராய நகர் தொகுதி கழகத் தோழர்கள் ஊர்வலம் புறப்படத் தயார் நிலையிலிருந்தபோது எடுத்த படம்.

தென்மாநில முதல்வர்கள் மாநாட்டு தீர்மானங்களை விளக்கவும், தமிழகத்துக்கு அரிசி தருவதில் மத்திய அரசு காட்டும் காலதாமதத்தை விளக்கவும் ஏற்கனவே அறிவித்தபடி இன்று சென்னையில் கழகம் சைக்கிள் பேரணியை நடத்தியது.

லட்சோப லட்சம் பேர் பங்கேற்ற இந்த சைக்கிள் பேரணிக்கு பொதுமக்களிடமிருந்து உற்சாகமான வரவேற்பு கிடைத்தது.

கொளுத்தும் வெயிலில் ஊர்வலம் வந்த கழகக் கொள்கை மறவர்களுக்கு ஆங்காங்கே நீரும், மோரும் கொடுத்துதாய்க்குலத்தினர் தங்களது பரிவை வெளிப்படுத்தினர்.

சென்னையில் உள்ள ஒவ்வொரு சட்ட மன்றத் தொகுதியிலிருந்தும் அந்தந்தத் தொகுதி கழகச் செயலாளர்கள் தலைமையில் இன்று காலை 10 மணி அளவில் ஊர்வலம் புறப்பட்டது.

மயிலை வே, தமிழ்மணி தலைமையில் மயிலாப்பூர் தொகுதித் தோழர்கள் சத்யா ஸ்டுடியோ அருகிலிருந்து ஊர்வலம் புறப்பட்டனர்.

சைதை துரைசாமி தலைமையில் சைதை தொகுதி தோழர்கள் அண்ணாசிலையிலிருந்தும் தி. நகர் மூர்த்தி தலைமையில் தியாகராய நகர் தொகுதி தோழர்கள் பெரியார் சிலையிலிருந்தும் ஊர்வலம் புறப்பட்டனர்.

அண்ணாநகர் தொகுதி கோதண்டராமன் தலைமையில் அண்ணா சிலையில் இருந்தும் ஆயிரம் விளக்கு தொகுதி தோழர்கள் தொகுதி செயலாளர் அங்க முத்து தலைமையில் வள்ளுவர் கோட்டத்திலிருந்தும் ஊர்வலம் புறப்பட்டனர்.

புரசை தொகுதி தோழர்கள் நீலகண்டன் தலைமையில் வெங்கடேசபுரம் காலனியிலிருந்தும் எழும்பூர் தொகுதி தோழர்கள் மா.சு.மணி, தலைமையில் டவுட்டனிலிருந்தும் புறப்பட்டனர்.

திருவல்லிக்கேணி தொகுதி தோழர்கள பாலன் தலைமையில் வெங்கட்ரங்கம்பிள்ளை தெருவிலிருந்தும் பூங்கா நகர் தொகுதி தோழர்கள் குமார் தலைமையில் நேரு ஸ்டேடியத்திலிருந்தும் புறப்பட்டனர்.

பெரம்பூர் தொகுதி தோழர்கள் ஜெயபால் தலைமையில் எருக்கஞ்சேரி நெடுஞ்சாலையிலிருந்தும் ராயபுரம் தொகுதி தோழர்கள் சோமசுந்தரம் தலைமையில் தண்ணீர் தொட்டியிலிருந்தும் ஊர்வலம் புறப்பட்டனர்.

டாக்டர் ராதா கிருஷ்ணன் நகர் தொகுதி தோழர்கள் மோகனசுந்தரம் தலைமையில் தண்டையார்பேட்டை மணிக்கூண்டிலிருந்து புறப்பட்டனர்.

சேப்பாக்கம் தொகுதி தோழர்கள் அன்புத்தம்பி தலைமையில் சிங்கண்ண செட்டி தெருவிலிருந்தும் துறைமுகம் தொகுதி தோழர்கள் எம். வி. ராமன் தலைமையில் சாலை விநாயகர் கோவில் தெருவிலிருந்தும் ஊர்வலம் புறப்பட்டனர்.

### வானை எட்டிய முழக்கங்கள்

ஊர்வலத்தில் வந்த அனைவரும் பேரறிஞர் அண்ணாவின் உருவம் பொறித்த கழகக் கொடிகளை சைக்கிள்களில் கட்டியிருந்தனர்.

தமிழகத்துக்கு அரிசி கேட்டு மத்திய அரசை வற்புறுத்தும் வாசகங்களைக் கொண்ட தட்டிகளையும் சிலர் கட்டியிருந்தனர்.

கழகமகளிர் அணியைச் சேர்ந்த சகோதரிகள் சைக்கிள் ரிக்ஷாக்களில் வந்தனர்.

### கழகப் பாடல்கள்

எஸ்.ஐ.இ.டி. கல்லூரி அருகிலிருந்து சீரணி அரங்கம்வரை ஊர்வலம் செல்லும் பாதைகளில் ஆங்காங்கே கழகக்கொடி தோரணங்கள் கட்டப்பட்டிருந்தன.

ஊர்வலம் வருவதுபற்றி இந்த வழிகளில் எல்லாம் ஆட்டோவில் மைக் வைத்து ஊர்வலம் பற்றிய முன்னறிவிப்புகளைக் கழகத் தோழர்கள் செய்து வந்தனர்.

ஒவ்வொரு தொகுதியிலும் ஆங்காங்கே ஒலிபெருக்கி வைத்து கழகக் கொள்கை விளக்கப் பாடல்களும், புரட்சித் தலைவர் பற்றிய பாடல்களும் ஒலிபரப்பப்பட்டன.

கழகத் தோழர்களின் ஊர்வலம் புறப்பட்டதும் சென்னை நகரின் அனைத்துப் பகுதிகளிலும் கொள்கை முழக்கங்கள் வானை எட்டின.

### மத்திய அரசே அரிசி கொடு

மத்திய அரசே அரிசி கொடு.

வரி வசூலிக்கும் மத்திய அரசே வறட்சிப்பணிகளுக்கு உதவி செய்.

பிரதமர் தந்த பத்து கோடி, யானைக்குப் போட்ட சோளப்பொரி.

பச்சிளம் குழந்தைகள் வயிறு குளிருது, மைய அரசே உனக்கேன் வயிறு எரியுது?

செய்யாதேசெய்யாதே சதி செய்யாதே. சத்துணவுத் திட்டத்தை ஒழிக்க சதி செய்யாதே.

மண்ணைக் காக்க நிதியைப் பெறுக, மக்களைக் காக்க நிதியைத் தருக.

மாநிலத்துக்கு அதிக அதிகாரம், அதைக் கேட்பது எங்கள் ஜீவாதாரம்,

### கட்டுப்பாடு காத்த கழகத்தினர்

திணிக்காதே திணிக்காதே இந்தி மொழியை திணிக்காதே.

மேற்கண்ட முழக்கங்களை எழுச்சியுடன்முழங்கியவாறு அந்தந்த தொகுதி தோழர்கள் தங்கள் தங்கள் தொகுதியை வலம் வந்தனர்.

எதிர்க்கட்சியினரைப் போல எந்த ஒரு கழகத் தோழரும் அநாவசியமான— அநாகரிகமான முழக்கங்களை எழுப்பவில்லை, ஊர்வலத்திலும் கடமையை உணர்ந்து கட்டுப்பாடு காத்தனர்.

சென்னை நகரின் அனைத்துத் தொகுதித் தோழர்களும், தங்களது தொகுதிகளை வலம வந்தபின்தேனாம்பேட்டை

(2-ம் பக்கம் பார்க்க



சைதை தொகுதிகழக தோழர்கள் ஊர்வலம் புறப்படத் தயார் நிலையிலிருந்தபோது எடுத்த படம்

# மத்திய அரசின் இலவச வக்கீல்

இயற்கையின் சோதனையால் பருவ மழை தவறி வறட்சி நிலை ஏற்பட்டுள்ள நிலையில் மைய அரசு தனது கடமையினைக் காலத்தோடு செய்யத் தவறியது.

இதனை எடுத்துக் கூறுவதற்கு இன்று தமிழகம் முழுமையும் கழகத் தோழர்களும் மன்ற மறவர்களும், உழைக்கும் மக்களும் பேரணி நடத்துகிறார்கள்.

இந்தப் பேரணி கருணாநிதிக்கு எவ்வளவு பெரும் எரிச்சலை ஏற்படுத்தியிருக்கிறது என்பதனை தி.மு. கழகத்தினர் சென்னையில் ஒட்டியுள்ள சுவரொட்டிகளும், 'முரசொலி' ஏடும் வெட்டவெளிச்சமாக்கி விட்டன.

**நாமோ மைய அரசின் போக்கைக் கண்டித்து பேரணி நடத்துகின்றோம் கருணாநிதியோ மைய அரசுக்காக இலவச வக்கீலாக வாதாடிக் கொண்டிருக்கிறார்.**

மைய அரசு தமிழகத்திற்கு அதிக அரிசி ஒதுக்காததை நியாயப்படுத்தி அவர் ஏற்கனவே எவ்வளவு ஆணித்தரமாக வாதாடியிருக்கிறார் என்பதனை இன்னும் தமிழகம் மறக்கவில்லை.

இப்போது மைய அரசுக்கு நியாயம் தேடி உடன்பிறப்புக்குக் கடிதமே எழுதியிருக்கின்றார்.

பேரணியில் கழகத் தோழர்கள் என்னென்ன கருத்துக்களை எடுத்துரைக்க வேண்டும் என்று டாக்டர் நாவலர் அவர்கள் ஒரு கட்டுரை எழுதியிருந்தார். இப்படிப் பேச வேண்டும் என்பதனை அவர் கட்டுரையின் தொடக்கத்திலேயே தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறார். அப்படியிருந்தும் இந்தக் கட்டுரை எழுதியவர் நாவலரே அல்ல என்று "சூடாமணி" கருணாநிதி வரிந்து தள்ளியிருக்கிறார்.

தமிழகத்திற்கு மைய அரசு அரிசி ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்று எத்தனை முறை மைய அரசைக் கேட்டோம் என்று விபரங்கள் இப்போதுதான் பட்டியல் போட்டு வெளியிடப்படுகின்றன.

இதனைக் கருணாநிதியால் தான் தாங்கிக் கொள்ள முடியுமா? அவர் ஏங்குவதெல்லாம் கோட்டை நாற்காலிக்கு அல்லவா?

அரிசிப் பிரச்சினையால் ஆட்சிக்கு வரமுடியாதா என்று ஏக்கம் கொண்டிருப்பவர் மைய அரசுக்குத் தானே வாதாடுவார்?

**தண்ணீர் தட்டுப்பாட்டால் ஆட்சியைத் தாவிப் பிடித்துவிட முடியாதா என்று தவித்துக் கொண்டிருப்பவர் மைய அரசின் மனம் மகிழத் தானே வாதிடுவார்?**

**தமிழகத்திற்கு அரிசி ஒதுக்கீடு செய்யக் கோரும் மகஜரில் அன்றைக்கு தி.மு.க. எம்.பிக்கள் கையெழுத்திட மறுத்தார்களே. அன்றைக்கே கருணாநிதியையும் அவரது கட்சியையும் தமிழர்கள் தெளிவாக அடையாளம் கண்டு கொண்டு விட்டார்கள்.**

எனவே கருணாநிதி எரிச்சல் நாயகராகிறார். ஏச்சும் இழி மொழியுமே தமது ஆயுதம் என்கிறார்.

---

46-வது வட்டம் சார்பாக

## சத்துணவு திட்டத்திற்கு நாவலரிடம் ரூ. 1000 நன்கொடை

சென்னை, ஏப். 3— சென்னை துறைமுகம் பகுதி 46-வது வட்டம் சார்பாக மாபெரும் கழகப் பொதுக்கூட்டம் ஏ. பாலசுந்தரம் தலைமையில் நடைபெற்றது. நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கலந்துகொண்டு சிறப்புரையாற்றினார்.

மற்றும் வியாகத் அலிகான் மதுசூதனன், மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, கஜேந்திரபாபு, ஆனந்தன், தரங்கை கண்ணன், விஜயன், கருணாநிதி, சாமிநாதன், ஆகியோர் கலந்து கொண்டு பேசினர். இக்கூட்டத்தில் வட்ட செயலாளர் எம்.பி. ஆனந்தன் முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவு திட்டத்திற்கு ரூ. 1000 நன்கொடை அளித்தார்.

---

சூரிய அடுப்பு:

## தமிழ் நாட்டில் உற்பத்தி செய்ய அரசு பரிசீலனை

சென்னை, ஏப் 3. தமிழகத்தில் சூரிய அடுப்புகள் உற்பத்தி செய்வதற்கு கழக அரசு திட்டமிட்டிருக்கிறது.

சட்ட மேலவையில் கேள்வி நேரத்தின்போது ஊரகத் தொழில் அமைச்சர் கே. ஏ. கே. கூறியதாவது:–

சூரிய அடுப்புக்களை உற்பத்தி செய்து மாநில அரசுகளுக்கு வினியோகிக்கும் திட்டத்தை மத்திய அரசு செயல்படுத்தி வருகிறது. சூரிய அடுப்புகளை பிரபலப்படுத்தும்படி மத்திய அரசு தமிழக அரசை கேட்டுக் கொண்டுள்ளது. சென்னையில் இரண்டு சிறப்பு கூட்டுறவு அங்காடிகள் மூலம் இவைகளை விற்பனை செய்வது பற்றி ஆய்வில் உள்ளது.

தமிழ் நாட்டில் சூரிய அடுப்புகள் உற்பத்தி செய்வதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்படும். நடுத்தர மக்களுக்கு பயன்படத்தக்க வகையில் நல்ல தரமுள்ள அடுப்புகளை உற்பத்தி செய்வது பற்றி தமிழக அரசு பரிசீலனை செய்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.

### திருமணம்

வீரசோழனைச் சேர்ந்த பி. எஸ். ஈ ஆதம் மகன் முகமது மைதீனுக்கும், ஓ. எம். எஸ். முகமத் அலிஜின்னா மகள் பாத்திமா பீவிக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது. ஏராளமான நண்பர்களும், உறவினர்களும் திருமணத்திற்கு வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

---

வாரணாசி அருகே

## கங்கை நதியில் படகு கவிழ்ந்து 40 பேர் சாவு

வாரணாசி, ஏப். 3— வாரணாசி அருகே கங்கை நதியில் சென்று கொண்டிருந்த படகு ஒன்று கவிழ்ந்ததால் அதில் இருந்த 40 பேர்களும் நீரில் மூழ்கி இறந்தனர்.

இந்தச் சம்பவம் இன்று காலை நடந்தது. மூழ்கியவர்களில் சிலர் பெண்கள்.

---

## ரசாக் தோட்டத்தில் கழக பொதுக் கூட்டம்

சென்னை, ஏப் 3— கழக அரசின் சாதனை விளக்க பொதுக் கூட்டம் சென்னை 77வது வட்டம் ரசாக்கார்டனில் நாளை மாலை ஆறு மணி அளவில் நடைபெற உள்ளது. அ. சுப்பிரமணியம் தலைமை வகிக்கிறார்.

மோகனரங்கம் எம்.பி. இ. மதுசூதனன் மதுரை பா. வளர்மதி, பூவை அரசன், வெள்ளை மண்ணடி கிருஷ்ணமூர்த்தி மற்றும் பலர் பேசுகிறார்கள்.

---

## நாடுமுழுமையும் வறட்சி: மத்திய அமைச்சர் அறிவிப்பு

திருச்சி, ஏப். 3— இன்றைக்கு ஒரு மாநிலத்தில் இரு மாநிலத்தில் அல்ல. பெரும்பான்மையான மாவட்டங்களில் வறட்சி நிலை ஏற்பட்டிருக்கிறது என்று மத்திய தொழில் அமைச்சர் திவாரி கூறினார்.

திருச்சியை அடுத்த கிருஷ்ண சமுத்திரம் கிராமத்தில் நடந்த விழாவில் பேசுகையில் திவாரி கூறியதாவது:-

இன்றைக்கு பத்து மாநிலங்கள் கடுமையான

(3-ம் பக்கம் பார்க்க)

---



---

## சத்துணவு திட்டம்: மத்திய அரசு நிதி உதவி தர வேண்டும்

அமைச்சர் திருநாவுக்கரசு வலியுறுத்தல்

திருச்சி ஏப. 3. தமிழக அரசு செயல்படுத்தி வரும் சத்துணவுத் திட்டத்துக்கு மத்திய அரசு நிதிஉதவி அளிக்க வேண்டும் என்று தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு கோரிக்கை விடுத்தார்.

பிரதமரின் 20 அம்சத் திட்டத்தின் கீழ் திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த கிருஷ்ணசமுத்திரம் கிராமத்தில் "பெல்" நிறுவனம் பல்வேறு சமூக நலப் பணிகளை நடத்து வருகிறது. அந்தக் கிராமத்தை பெல் நிறுவனம் தத்து எடுத்துள்ளது. இதுசம்பந்தப்பட்ட விழா நிகழ்ச்சிகளை நேற்று மத்திய அமைச்சர் என். டி. திவாரி துவக்கி வைத்தார்.

தமிழக தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு இந்த விழாவில் கலந்து கொண்டு பேசினார்.

அவர் கூறியதாவது:

தமிழகத்தில் மதிய உணவுத் திட்டத்தை புரட்சித்தலைவர் அரசு மிகவும் சீரிய முறையில் செம்மையாக நடத்தி வருகிறது. தமிழக அரசின் திட்டப்பணிகளின் ஒரு பகுதியாகவே இந்த மதிய உணவுத் திட்டம் செயல்படுத்தப்பட்டு வருகிறது.

### ரூ 130 கோடி தருவீர்

இந்தத் திட்டத்துக்கு மத்திய அரசு நிதி உதவி அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். நிதி உதவியை விரைவில் அனுப்பி வைக்கும்படி மத்திய அரசை அமைச்சர் திவாரி விரைவு படுத்துமாறு கேட்டுக் கொள்கிறேன். தன்னுடைய செல்வாக்கை உபயோகித்து மத்திய அமைச்சர்கள் இந்த முக்கிய உதவியை செய்ய வேண்டும்.

தமிழகத்துக்கு மாதந்தோறும் ஒரு லட்சம் டன் அரிசியும் 40 ஆயிரம் டன் கோதுமையும் மத்திய அரசு அனுப்பவேண்டும் இந்த ஒதுக்கீட்டை உடனடியாக செய்யவேண்டும். சத்துணவு திட்டத்துக்கு 130 கோடி ரூபாய் மத்திய அரசு அனுப்பவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

வறட்சியால் பாதிக்கப் பட்டிருக்கிறது. உண்மையில் இந்தியா மட்டும் வறட்சியால் பாதிக்கப் படவில்லை.

உலகத்தின் ஒரு பகுதியே வறட்சியால் பாதிக்கப் பட்டிருக்கிறது. ஆஸ்திரேலியாவிலிருந்து இந்தியா வரை பல தென் கிழக்கு ஆசிய நாடுகள் வறட்சியால் பாதிக்கப் பட்டிருக்கின்றன.

இந்தியாவில் ஏற்பட்டுள்ள வறட்சி நிலையை எப்படிச் சமாளிப்பது? கொள்முதலைத் தீவிரப் படுத்தி உணவு வினியோகத்தைச் சீராகச் செய்ய வேண்டும்.

இவ்வாறு மத்திய தொழில் அமைச்சர் திவாரி கூறினார்.

---

அகாலிகள் போராட்டம்

## பஞ்சாபில் 15 எம்.எல்.ஏ. உள்பட 600 பேர் கைது

சண்டிகார், ஏப். 3— அகாலி தளத்தைச் சேர்ந்த சீக்கியர்கள் நாளை பஞ்சாபில் போராட்டம் நடத்தப் போவதாக அறிவித்திருந்தது தெரிந்ததே.

இந்த போராட்டத்தை யொட்டி நேற்று பஞ்சாப் மாநிலத்தைச் சேர்ந்த பல்வேறு பகுதிகளில் சுமார் 600 அகாலிதள தலைவர்களை போலீசார் கைது செய்தனர். ஏராளமான பேர் சீக்கியர் கோயில்களான குருத்துவாராக்களில் புகுந்து ஒளிந்து கொண்டனர் என்று சில தகவல்கள் கூறுகின்றன.

போராட்டத்துக்கு ஊக்கம் அளித்து கிளர்ச்சி நடத்துமபடி சீக்கியர்களைத் தூண்டியவர்கள் தான் நேற்று கைது செய்யப்பட்டனர் என்று போலீசார் தெரிவித்தனர்.

## பெண்கள் ஆர்ப்பாட்டம்: கண்ணீர்புகை

அலிகார், ஏப். 3— கடந்த வியாழனன்று அலிகாரில் நடந்த துப்பாக்கிச் சூடு பற்றி நீதி விசாரணை நடத்தவேண்டும் என்ற கோரிக்கையை வலியுறுத்தி நேற்று சுமார் 150 பெண்கள் அலிகாரில் ஆர்ப்பாட்டம் செய்தனர். அண்மையில் நடந்த சம்பவங்களின் போது பெண்கள் பலர் தாக்கப்பட்டதாகவும் இந்த அக்கிரமச் செயல்கள் ஒழிக்கப்பட வேண்டும் என்றும் அவர்கள் கோரினார்கள்.

கூட்டத்தினர் கலைந்து செல்லாததால் போலீசார் அவர்கள் மீது கண்ணீர் புகை குண்டுகளை வீசினார்கள். பின்னர் மாவட்ட அதிகாரிகள் ஆர்ப்பாட்டக்காரர்களின் கோரிக்கைகளை கவனிப்பதாக உறுதி அளித்தனர்.

---

அமைச்சர் குழந்தைவேலு தகவல்:

## கோயம்புத்தூரில் புறவழிச்சாலை அமைக்க ரூ. 36 லட்சம் அனுமதி

சென்னை, ஏப். 3. கோயம்புத்தூரில் புறவழிச்சாலை அமைக்க தேவைப்படும் நிலங்களைக் கையகப்படுத்துவதற்கு மத்திய அரசு ரூ. 36 லட்சம் அனுமதி வழங்கியிருக்கிறது என்று அமைச்சர் குழந்தைவேலு மேலவையில் தெரிவித்தார்.

கேள்வி நேரத்தின் போது உள்ளாட்சித்துறை அமைச்சர் குழந்தைவேலு கூறியதாவது:—

"தேசிய நெடுஞ்சாலைகளை பராமரிப்பதும் அவற்றை மேம்படுத்துவதும் மத்திய அரசின் பணியாகும்.

ஆகவே தமிழக அரசு மத்திய அரசிடம் நிதி உதவி கோருவது என்ற கேள்வி எழாது. ஆயினும் கோயம்புத்தூர் புறவழிச் சாலை அமைப்பதற்காக தேவைப்படும் நிலங்களை கையகப்படுத்துவதற்கு 36 லட்சத்து 42 ஆயிரத்து 500 ரூபாய் மத்திய அரசு அனுமதி வழங்கியுள்ளது.

6-வது ஐந்தாண்டு திட்டத்தில் மத்திய அரசு கோயம்புத்தூர் புறவழிச் சாலைக்கு ரூ. 50 லட்சம் ஒதுக்கியுள்ளது. இந்த புறவழி சாலையின் நீளம் 27 கிலோ மீட்டர். தேவைப்படும் நிலப்பரப்பின் விஸ்தீரணம் 341 ஏக்கர். இதில் 27 ஏக்கர் 61 சென்ட் கையகப்படுத்தப் பட்டுள்ளது.

புறவழிச்சாலை அமைக்கும் பணி 10 ஆண்டுகளாக தொடர்ந்து நடைபெற்று வருகிறது. மத்திய அரசு போதிய நிதி ஒதுக்காததன் காரணத்தால் இந்தவேலைகள் வேகமாக நடக்கவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

---

## இ. காங்கிரஸ் தலைவர் பதவி விலக இ.காங்கிரஸ் எம்.எல்.ஏ. கோரிக்கை

பெங்களூர், ஏப். 3— கர்நாடக மேல் சபைக்கு நடந்த தேர்தல்களில் இந்திரா காங்கிரஸ் தோல்வி அடைந்ததை யொட்டி சட்டசபை இ.காங்கிரஸ் கட்சித் தலைவர் வீரப்பமொய்லி ராஜினாமா செய்யவேண்டும் என்று இ. காங்கிரஸ் எம் எல் ஏ ராவ் காஸபே ஒரு அறிக்கையில் தெரிவித்துள்ளார். மேலும் காங்கிரஸ் ஆதர்த்த சுயேச்சை வேட்பாளர்கள் தோல்வியுற்றதற்கும் தேர்தலில் கட்சிமாறி ஓட்டு விழுந்ததற்கும் மொய்லியே முழு காரணம் என்றும் அவர் கூறியுள்ளார்.

---

## கழகப் பேரணி...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

எஸ். ஐ. இ. டி. கல்லூரி அருகே பிற்பகல் வந்து கூடினார்கள்.

### லட்சோப லட்சம் பேர் திரண்டனர்

ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் ஆயிரக்கணக்கில் தொண்டர்கள் வர எஸ்.ஐ.இ.டி. கல்லூரியை அவர்கள் அடைந்த போது லட்சோப லட்சமாகக் குவிந்துவிட்டனர்.

எஸ்.ஐ.இ.டி. கல்லூரி அருகிலிருந்து தொகுதி வாரியாக தொண்டர்கள் அணிவகுத்து மாபெரும் பேரணி புறப்பட்டது.

அண்ணாசாலை, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, பாரதி சாலை வழியாக சென்னை கடற்கரை சீரணி அரங்கிற்கு பேரணி சென்றது.

எஸ். ஐ. இ. டி. கல்லூரியிலிருந்து புறப்பட்ட மாபெரும் பேரணிக்கு மாவட்ட செயலாளர் ஜேப்பியார் தலைமை வகித்தார்.

---

## கழகத்தில் இணைந்த மாற்று கட்சியினர்

தஞ்சாவூர், ஏப் 3— தஞ்சை மாவட்டம் செம்பனார் கோவில் ஒன்றியத்தைச் சார்ந்த கஞ்சாநகரம் மங்கனூர் ஆகிய கிராமங்களில் திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து மணி, பன்னீர்செல்வம் ஆகியோர் தலைமையில் 38 பேரும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து பெரியநாயகம் லூர்து மேரி, தெரசம்மா ஆகியோர் தலைமையில்; 13 ஆண்களும் 62 பெண்களும் ஆக 113 பேர் கழகத்தில் சேர்ந்துள்ளார்கள் 26 ந்தேதி ஒன்றிய செயலாளர் கலிய பெருமாள் தலைமையில் கொடி யேற்று விழா நடைபெற்றது.

கொடியேற்று விழாவிற்கு ஒன்றிய துணைச் செயலாளர் த. லோகநாதன ஒன்றியப் பொருளாளர் சிவ. கோவிந்தராஜன் மற்றும் மேலையூர் பாலுப்பிள்ளை, கீழ்ருப்பு ராமலிங்கம் ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

தஞ்சை மாவட்டம் செம்பனார் கோவில் ஒன்றியத்தைச் சார்ந்த மேமாத்தூர், கண்டியங்கடல் ஆகிய கிராமங்களிலிருந்தும் ஒட்டன்காடு என்ற ஊரிலிருந்தும் ஞான ஆரோக்கியம் என்ற மார்க்சிஸ் கட்சி தொண்டர் தலைமையில் 50 மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தொண்டர்கள் கழகத்தில் சேர்ந்துள்ளார்கள்.

---

## கருநாடகம்: 16 மாவட்டங்களில் கடும் குடிதண்ணீர் பஞ்சம்

பெங்களூர், ஏப். 3— கருநாடக மாநிலத்தில் 16 மாவட்டங்களில் கடும் குடி தண்ணீர் தட்டுப்பாடு ஏற்பட்டிருக்கிறது என்று ஊரகவளர்ச்சி அமைச்சர் அப்துல் நஜீர் சாகிப் சட்டமன்றத்தில் கூறினார்.

இதுவரை கருநாடக மாநிலமே கண்டிராத அளவுக்கு குடிதண்ணீருக்குத் தட்டுப்பாடு ஏற்பட்டிருக்கிறது. ஒரு மாவட்டத்தில் அல்ல. மாநிலத்தின் பெரும் பகுதியில்-16 மாவட்டங்களில் இந்த நிலை ஏற்பட்டிருக்கிறது.

குழாய்க் கிணறுகள் அமைக்கவும், கிணறுகளை ஆழப்படுத்தவும் இதுவரை பத்துகோடியே 60 லட்சம் ரூபாய் ஒதுக்கீடு செய்யப்பட்டிருக்கிறது கிராமங்களில் ஆழ்துளைக் கிணறுகள் தோண்டப்பட்டு வருகிறது.

ஏற்பட்டிருக்கின்ற குடி தண்ணீர் தட்டுப்பாடு பெரும் சோதனையாக இருக்கிறது. இந்தச் சோதனையிலிருந்து மீள்வதற்கு கர்நாடக அரசு எல்லா நடவடிக்கைகளையும் எடுத்து வருகிறது.

இவ்வாறு மேலவையில் அமைச்சர் அப்துல் நஜீர் சாகிப் கூறினார்.

---

தென்கோவன் முன்னிலையில்

## கழகத்தில் இணைந்த 120 பேர்

தஞ்சாவூர், ஏப். 3— திருவாரூர் தென்கோவன் முன்னிலையில் வலது கம்யூனிஸ்ட் மற்றும் சில கட்சிகளைச் சேர்ந்த 120 பேர் கழகத்தில் இணைந்தனர்.

கடந்த 27ந்தேதி திருத்துறைப்பூண்டி தாலுகா ஓடாச்சேரியில் நடந்த கழகப் பொதுக் கூட்டத்தில் அவர்கள் கழகத்தில் இணைந்தனர். இந்தக் கூட்டத்தில் கவிஞர் உதயகுமாரும் பங்கேற்றார்.

---

## பண்டைய தமிழ் மரபு காக்கும் தமிழக முதல்வர் புரட்சித்தலைவர்

சென்னை, ஏப். 3— சென்னையில் நடைபெறும் இந்து சமய கலாச்சார கலை விழாவில் இன்று காலை கவியரங்கம் நடந்தது.

கவிஞர் வாலி கவியரங்கத்துக்கு தலைமை வகித்தார்.

முதல்வர் புரட்சித்தலைவர் இந்த விழாவில் பேசுவதாக அறிவிக்கப் பட்டிருந்தது.

காலை 11 மணிக்கு புரட்சித்தலைவர் விழா நடக்கும் இடத்துக்கு வந்தார்.

கவியரங்கத்தின் இடையில் கவிஞர் வாலி மேடைக்கு வந்து முதல்வர் புரட்சித் தலைவர் பேசுவார் என்று அறிவித்தார்.

உடனே முதல்வர் புரட்சித்தலைவர் மேடைக்கு வந்து பேசியதாவது:

கவியரங்கம் நடந்து கொண்டிருக்கும் போது, இடையில் குறுக்கிட்டுப் பேசுவது தமிழ்மரபு ஆகாது. ஆகவே, கவிஞர்கள் திட்டமிட்டபடி கவியரங்கத்தில் பாடட்டும். இந்த நிகழ்ச்சியில் குறுக்கிட நான் விரும்பவில்லை, மாலை நிகழ்ச்சிகளில் நான் கலந்து கொண்டு பேசுகிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார். பின்னர் கவிஞர் சிதம்பரநாதன் பேசும்போது முதல்வர் புரட்சித்தலைவரின் அறிவிப்பு பழங்கால தமிழ் மரபு இன்னும் மறையவில்லை என்பதை உணர்த்துகிறது என்று குறிப்பிட்டார்.

கவிஞர் வாலி கவிதை பாடும் போது "குடத்தின் விளக்காக இருந்த என்னை உன் படத்தால் உலகம் அறியச் செய்தாய்" என்றும், "நாயாய் வீதியில் அலையும்போது தாயாய் எனை வந்தணைத்தாய்" என்றும், "செங்கோட்டை சாய்ந்தாலும் உன் கோட்டை சாயாது" என்றும் குறிப்பிட்டார்.

மாநாட்டுக்கு வந்திருந்த மக்கள் எல்லாம் அப்போது மண்டபம் அதிரக் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

இறுதுவரை கவியரங்க நிகழ்ச்சியை முதல்வர் புரட்சித் தலைவர் கேட்டு ரசித்தார்.

புதுப் பெரியவர் காமகோடி ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள், முதல்வர் புரட்சித் தலைவருக்கு பட்டாடையும் மாலையும் அணிவித்தார்.

சென்னையில்

## புதிய திரையரங்கு

சென்னை. ஏப். 3— சென்னை பெரம்பூர் பாரக்ஸ் ரோடில் வசந்தி என்ற புதிய திரையரங்கு ஏப்ரல் 14ந் தேதி திறக்கப்பட உள்ளது.

குளிர் சாதன வசதி பொறுத்தப்பட்ட இத்தியேட்டர் 955 இருக்கை வசதி கொண்டது.

திரையரங்கின் அடித்தளம் கார்நிறுத்துமிடமாகவும் முதல் தளம் திரையரங்காகவும் நவீன முறையில் அமைக்கப்பட்டுள்ளது.

இத்திரையரங்கில் பெண்களுக்கு என தனியான சிற்றுண்டி ஸ்டாலும் அமைக்கப்பட்டுள்ளது.



கர்நாடகாவில்

எம் எல் சி தேர்தல்

## ஜனதா வேட்பாளருக்கு இ. காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் ஓட்டு

பெங்களூர் ஏப் 2— கர்நாடக மாநில எம். எல். சி. தேர்தலில் ஜனதா வேட்பாளர்களுக்கு இந்திரா காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் ஓட்டளித்துள்ளனர்.

கர்நாடக மேலவையின் இரு இடங்களுக்கு தேர்தல் நடந்தது. இதற்கு இரண்டு அமைச்சர்கள் போட்டியிட்டனர்.

கர்நாடக சட்டசபை ஆளும் அணியில் ஜனதா எண்ணிக்கை 82 தான்.

225 உறுப்பினர்கள் கொண்ட கர்நாடகசட்டசபையில் 222பேர் ஓட்டளித்தனர்.

இதில் ஆளும் அணி தரப்பு வேட்பாளா இருவரும் 141 ஓட்டுக்கள் பெற்றனர்.

இந்திரா காங்கிரஸ், கிராந்திரங்கா அணி ஆதரித்த சுயேச்சை வேட்பாளர்கள் 78 வாக்குகளைப் பெற்றனர்.

சபையில் இவர்கள் பலம் 89 ஆகும் ஆகவே 11 பேர் ஆளும்தரப்பிற்கு ஆதரவாக ஓட்டளித்துள்ளது தெரியவந்துள்ளது. ஆளும் அணியில் மொத்தம் 126 பேர் இருக்கிறார்கள்.



தமிழகத்துக்கு வாழ்வளிக்கும்

# தோல் தொழில் வளர்ச்சி கார்ப்பரேஷன்: கே.ஏ.கே. பெருமிதம்

**சென்னை. ஏப். 3- தொலைநோக்குப் பார்வையுடன் புரட்சித்தலைவர் ஆட்சியில் அமைக்கப்படும் தோல் வளர்ச்சிக் கார்ப்பரேஷன் தமிழகத்துக்கு வாழ்வளிக்கும் வகையில் சீரிய முறையில் செயல்படும் என்று அமைச்சர் கே. ஏ. கே. பெருமிதத்துடன் கூறினார்.**

தமிழ்நாடு தோல் தொழில் வளர்ச்சிக் கார்ப்பரேஷன் தொடக்க விழா நேற்று சென்னையில் நடைபெற்றது. மத்தியதொழில் அமைச்சர் திவாரி இந்த கார்ப்பரேஷனைத் துவக்கி வைத்துப் பேசினார்.

தமிழக ஊரகத் தொழில் அமைச்சர் கே. ஏ. கே. விழாவுக்குத் தலைமை வகித்துப் பேசினார்.

அவர் கூறியதாவது:- தொன்மைமிக்க தொழிலான தோல் பதனிடும் தொழில் தமிழகத்தில் சிறப்பான முறையில் நடந்து வருகிறது. இந்தத் தொழில் மேலும் மேம்பாடடையவும். தமிழகத்தில் இருந்து தோல்கள் மற்றும் தோல் பொருள்கள் பெருமளவில் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவும், தமிழ்நாடு அரசு இந்த தோல் வளர்ச்சிக் கார்ப்பரேஷனை ஏற்படுத்தி உள்ளது.

தொலைநோக்கு பார்வையுடன் புரட்சித் தலைவர் ஆட்சியில் இத்தகைய கார்ப்பரேஷன் துவங்கப்படுகிறது. தனால் தோல் தொழிலதிபர்கள் நல்ல முறையில் பயன் பெறுவார்கள்.

## ரூ 1 கோடி செலவில் தொழில் கேந்திரம்

ரூபாய் ஒரு கோடி செலவில் தோல்தொழில் கேந்திரம்ஒன்றும்திண்டுக்கல்லிலும்— ராணிப்பேட்டை மற்றும் பேரணாம்பட்டிலும் பொதுசேவை நிலையங்கள் அமையவிருக்கின்றன.

பேரணாம்பட்டு நிலையங்களுக்கு மத்திய அரசு 50 லட்சம் ரூபாய் கொடுத்துள்ளது. இப்போது மீண்டும் ரூ. 50 லட்சம் அனுமதித்திருக்கிறது. இதற்காக நான் பாராட்டுகிறேன். இந்த பொது சேவை நிலையங்கள் மூலம் தோல்பதனிடும் சிறு தொழில் அதிபர்கள் நல்ல பாதுகாப்புகளைப் பெறுவார்கள். தோல் தொழில் தொடர்புடைய எலக்ட்ரானிக் தொழிலகங்கள் திண்டுக்கல்லிலும், புதுக்கோட்டையிலும் அமைப்பதற்கு நிபுணர் குழு ஆய்வு நடத்தி சிபாரிசு செய்துள்ளது.

அந்த பரிந்துரைகளமீது விரைவில் முடிவெடுத்து இரண்டு கேந்திரங்களையும் அமைத்துத் தர வேண்டுமஎன்று கேட்டுக் கொள்கிறேன்.

பாரதம்தோல் கார்ப்பரேஷனின் தென்மண்டல அலுவலகம் சென்னையில் ஏற்பட வேண்டும். என்றும் கேட்டுக் கொள்கிறன்.

## டெல்லி மாநாடு

கடந்த 1981 ஆம் ஆண்டு அக்டோபர் 15ம் தேதி டெல்லியில் நடைபெற்ற மாநாட்டில் இது பற்றி நான் விடுத்த கோரிக்கைகள் இன்று நிறைவு பெறுவது பற்றி எனது பாராட்டைத்தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் கே. ஏ. கே கூறினார்,

முன்னதாக தொழில் துறை செயலாளர் எம். ஏ. கே. தயாப் வரவேற்றுப் பேசினார். தமிழ்நாடு தோல் வளர்ச்சிக் கார்ப்பரேஷன் தனி அதிகாரி ஓ. ஆர் ராவ் நன்றி கூறினார்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D.M.K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029.

Editor:
K. PARASURAMAN

## கதர் வாரிய உறுப்பினராக மதுராந்தகம் தசரதன்

சென்னை, ஏப். 3— தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரிய உறுப்பினராக மதுராந்தகம், எம் எஸ் தசரதன் நியமிக்கப்பட்டிருக்கிறார். அமைச்சர் ராஜேந்திரனுக்கு தசரதன் மாலை அணிவித்து வாழ்த்து பெற்றார். அப்போது சட்டமன்ற உறுப்பினர் உக்கம்சந்த் உடனிருந்தார்.

## கிள்ளையில் ஆர். சவுந்தரராசன் பங்கேற்ற நிகழ்ச்சிகள்

கடலூர், ஏப். 3— கிள்ளை பிச்சாவரம், சிதம்பரம் ஆகிய ஊர்களில் கழகத் தோழர்கள் ஏற்பாடு செய்திருந்த பொதுக் கூட்டங்களில் கலந்து கொண்டு முன்னாள் அமைச்சர் ஆர். சௌந்திரராசன் பேசினார் பலவேறு இடங்களில் எம்ஜிஆர் மன்றங்கள் ஏற்பாடு செய்திருந்த கழகக் கொடி ஏற்று விழாக்களில் கலந்து கொண்டு கொடி ஏற்றிவைத்துப்பேசினார்.

கிள்ளை பேரூராட்சி மன்ற முன்னாள் தலைவர், கழகத்தோழர் கே. கலைமணி தலைமையில் கிள்ளை எம் ஜி ஆர மன்ற தலைவர் ஆர் சி காத்தவராய சாமியின் தந்தை சின்னமாரியின் படத்தை அனைத்துலக எம் ஜி ஆர் மன்ற பொதுச்செயலாளர் ஆர் சௌந்தரராசன் திறந்துவைத்துப்பேசினார் மற்றும் தமிழ்நாடுகதர் வாரிய உறுப்பினர் தன. ஜெயராமன், எம். கோவிந்தராசு, ஆர். இராமலிங்கம், எஸ்.சி. சுந்தரமூர்த்தி, ஜி. நல்லரையன், சீனு. இராஜகுமார், லியாகத அலிகான் டாக்டர்கள் வி.பி. கலியபெருமாள், கே. முத்துவேல உள்பட பலர் கலந்து கொண்டு பேசினார்கள். திருமதி தேன்மொழி காத்தவராய சாமி நன்றி கூறினார். முன்னாள் அமைச்சர் ஆர். சௌந்தரராசன், தேன்மொழி, காத்தவராயசாமியின் குழந்தைக்கு பெயர் சூட்டினார்.

கிள்ளைகடை வீதியில் ஆர் சௌந்தரராசன் எம.ஜி.ஆர். மன்றத்தின் சார்பில் ஏற்பாடுசெய்யப்பட்டிருந்த கழகவிழாவில் கலந்து கொண்டு இறுதியில் கழக கொடியை ஏற்றி வைத்தார். சிதம்பரத்தில் நடைபெற்ற கழகப் பொதுகூட்டத்திலும்கலந்து கொண்டுபேசினார்.

## கோடம்பாக்கம் குமார் நிகழ்ச்சிகள்

ஏப்ரல் 5— எழும்பூர்
7- மதுக்கூர்
8- பட்டுக்கோட்டை
9- திருப்பனந்தாள்
10- கும்பகோணம்
11,12,13 கீழ் வேலூர் ஒன்றியம்
14, 15, சென்னை
16 முதல் 20 வரை தர்மபுரி மாவட்டம்

எடை அளவு

பழுதுபார்ப்போர் சங்க

## நிர்வாகிகள் தேர்வு

சென்னை, ஏப். 3— தமிழ்நாடு எடை அளவு பழுதுபார்ப்போர் முன்னேற்ற சங்கத்தின் புதிய நிர்வாகிகள் தேர்தல் அண்மையில் நடைபெற்றது.

சங்கத்தின் தலைவராக ஏ. ஈ. பழனிக்குமார் துணைத் தலைவராக ஜெயச்சந்திரன், பொதுச் செயலாளராக ஏ. டி. சாமி, இணைச்செயலாளராக எம். வி. ராமன், பொருளாளராகஏ.பிரசாத் ராவ் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

எஸ். ஆர். ராதா பாராட்டு

## மக்கள் குறைதீர்க்கும் மாபெரும் தலைவர் புரட்சித்தலைவர்

சென்னை. ஏப். 3- எத்தனை நெருக்கடியிலும் ஏழை எளிய மக்களின் குறைகளைக் கேட்டு நிவர்த்தி செய்யும் ஒரே தலைவர் புரட்சித்தலைவர் என்று கழக உறுப்பினா எஸ். ஆர். ராதா சட்டமேலவையில் பெருமிதத்துடன் கூறினார்.

சட்ட மேலவையில் தமிழ்நாடு 1982-83ம் ஆண்டுக்கான துணைநிதி நிலை அறிக்கை மீதான விவாதத்தில் கலந்து கொண்டு பேசிய கழக உறுப்பினர் எஸ். ஆர். ராதா கூறியதாவது:—

தேங்கிக் கிடக்கும் கைத்தறித் துணிகளை விற்பனை செய்வதற்கு தமிழக அரசு சீரிய திட்டங்களை செயல்படுத்தி வருகிறது. ரூபாய்10கோடி பெறுமானமுள்ள கைத்தறி துணிகளை நிலமற்ற ஏழை எளிய விவசாயிகளுக்கு இலவசமாக கொடுக்க முன் வந்துள்ள புரட்சித்தலைவர் அரசை நான் மனமாரப்பாராட்டுகிறேன்.

வறட்சி நிவாரணப் பணிகளை இந்த அரசு முழுமையாக செய்து வருகிறது. வாழ்வளிக்கும் பல்வேறு திட்டங்களையும் அரசு செயல்படுத்தி வருகிறது.

வறட்சி நிலை குறித்த அறிக்கை காலதாமதமாக அனுப்பட்டுள்ளது என்று சிலா வதந்திகளை கிளப்பி விடுகிறார்கள். இது தவறான போக்கு எந்தக் காலத்திலும் இல்லாத அளவில் இன்று வறட்சி நிவாரணப் பணிகள் செயல்படுத்தப்பட்டு வருகின்றன.

ஒரு காலத்தில் ஆயிரக்கணக்கான குழாய்கள் வாங்கப்பட்டன. ஆனால் அந்தக் குழாய்கள் பயன் படுத்தப்பட்டனவா என்பது சந்தேகத்திற்குரிய விஷயம். இன்றைய நிலை அப்படி இல்லை. நிவாரணப் பணிகள் குறையில்லாமல செய்யப்பட்டு வருகின்றன.

## ஏழை மக்களின் குறை தீர்க்கும் ஒரே தலைவர்

முதல் அமைச்சரை இன்று தமிழகத்தின் அனைத்து மக்களுமே பார்த்து தங்களது குறைகளை நேரில் எடுத்துச் சொல்லும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. எந்தநெருக்கடியிலும் மக்களின் குறைகளை நேரில்கேட்டு நிவர்த்தி செய்யும் ஒரே தலைவர் புரட்சித் தலைவர் சிறுவன் முதல் வயதான மூதாட்டிவரை அவரை சந்திக்கலாம் சந்தித்து குறைகளை கூறலாம்.குறைகளைக் கேட்டு உடனடியாக நடவடிக்கை எடுக்கும் தலைவரும் புரட்சித் தலைவர் தான்.

சில முதல்வர்கள் இருக்கிறார்கள். பார்ப்பார்கள் குறையையும், கேட்பார்கள்.ஆனால் நடவடிக்கை எடுக்க மாட்டார்கள்.

ஏழை எளிய மக்களின் குறை தீர்க்கும் தலைவர் உலகத்திலேயே புரட்சித் தலைவர் ஒருவர் தான் என்பதை அறுதியிட்டுக் கூறுகிறேன்.

இவ்வாறு எஸ். ஆர். ராதா கூறினார்.

## சென்னையில் கலர் டி. வி. ஒளிபரப்பு வெற்றி

சென்னை, ஏப். 2— ஒலியும், ஒளியும் நிகழ்ச்சியையும், சினிமாபடத்தையும் கலரில் ஒளிபரப்பி சென்னை டெலிவிஷன் வெற்றியடைந்துள்ளது,

கலரில் ஒளிப்பரப்பிய நிகழ்ச்சி திருப்திகரமாக இருந்தது என்று பலர் டெலிவிஷன் நிலையத்திற்கு டெலிபோன் மூலம் பாராட்டு தெரிவித்தனர். என்று டெலிவிஷன் அதிகாரி தெரிவித்தார்.

வீடுகட்ட

## கூட்டுறவு கடன்: அரசு புதிய அறிவிப்பு

சென்னை, ஏப். 3— புதிய வீடுகள் கட்டுவதற்காக கூட்டுறவு நிறுவனங்களிடமிருந்து பெறக்கூடிய கடன் தொகை அளவு மாற்றியமைக்கப்பட்டுள்ளதாக தமிழக அரசு அறிவித்துள்ளது. மாத சம்பளம் ரூ. 350 உள்ள நலிந்த பிரிவினருக்கு அதிகபட்சம் 10 ஆயிரம் ரூபாய் என்றும், ரூ 351 லிருந்து 600 ரூபாய் வரை மாத சம்பளம் பெறுபவர்களுக்கு ரூ 18 ஆயிரம் என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. நடுத்தர வருமானமுள்ள ரூ 601லிருந்து ரூ1500 வரை மாத சம்பளம் வாங்குபவர்களுக்கு அதிகபட்சம் 50 ஆயிரம் ரூபாயும், ரூ. 1501லிருந்து 3000 வரை வருமானம் பெறுபவர்களுக்கு 60 ஆயிரம் ரூபாய் என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளதாக அரசு செய்திக் குறிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது.

# தாலுக்கா ரீதியில் பின் தங்கிய பகுதிகளில் தொழில் துவங்க அனுமதி

## அமைச்சர் திருநாவுக்கரசு வலியுறுத்தல்

சென்னை, ஏப். 3- தமிழகத்தில தாலுக்கா அல்லது ஊராட்சி ஒன்றியமாக பாரத்து பிற்பட்ட பகுதிகளில் புதிய தொழில்கள தொடங்க மத்திய அரசு அனுமதி தரவேண்டும் என்று தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு வேண்டுகோள் விடுத்தார்



தமிழ்நாடு தோல் தொழில் வளர்ச்சி கார்ப்பரேஷன் துவக்க விழாவில் தமிழக தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு கலந்து கொண்டு பேசினார்.

அவர் கூறியதாவது:—

தொழில்களே இல்லாத மாவட்டங்களில் புதிய தொழில்கள் அமைப்பது என்ற மத்திய அரசின் கொள்கையால் தமிழகம் பாதிக்கப்பட்டுள்ளது. தொழில்களே இல்லாத மாவட்டம் இல்லாமற் போனாலும் இன்று தமிழகத்தில் தொழில்களே இல்லாத தாலுக்காக்கள் உள்ளன.

தொழிற்சாலைகள் இல்லாத பிற்பட்ட தாலுக்காக்களும் பஞ்சாயத்து யூனியன்களும் இருக்கின்றன.

### பின் தங்கிய பகுதிகள்

ஆகவே தாலுக்கா மற்றும் ஊராட்சி ஒன்றியம் வாரியாகப் பார்த்து பின் தங்கிய பகுதிகளில் தொழில்கள் தொடங்க மத்திய அரசு அனுமதி தரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அப்படி அனுமதி தரப்படுமானால் அது தமிழகத்துக்கு நல்ல பயனை அளிக்கும்.

பிற்பட்ட வட்டங்களில் தொடங்கப்படுகிற தொழில்களுக்கு மானிய உதவி அளிக்கப்படும் மத்திய திட்டம் மேலும் சில ஆண்டுகளுக்கு தொடர வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன்.

### விரைவில் அனுமதி தருக

தமிழகம் சார்பில் அனுப்பப்பட்டுள்ள விண்ணப்பங்களுக்கு விரைவில் தொழில் தொடங்க அனுமதி தருமாறு கேட்டுக் கொள்கிறேன். தாமதம் செய்யாமல் அவற்றை பைசல் செய்து தமிழக மக்கள் பயன் பெறுமாறு ஆவன செய்ய வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.



# தென்னாடு பிரிந்து விட்டதாக ஏமாற்று செய்தி வெளியிட்ட பம்பாய் ஏடு

பம்பாய், ஏப் 3- "தென்னிந்தியா தனிநாடு ஆகியது. அதற்கு சஞ்சீவ ரெட்டி ஜனாதிபதியாக நியமிக்கப்பட்டுள்ளார்" இவ்வாறு பம்பாயிலிருந்து வெளிவரும் 'டெய்லி' என்ற தினசரி ஆங்கிலப் பத்திரிகை நேற்று முன் தினம் செய்தி வெளியிட்டு இருந்தது. அதுவும் முதல் பக்கத்தில் "கொட்டை' எழுத்துக்களில் அந்த செய்தி பிரசுரமாகியிருந்தது.

இந்த செய்தி பம்பாய் வாசிகளிடம் மிகவும் பரபரப்பை உண்டாக்கியது.

இந்த செய்தி உண்மைதானா என்று அறிய அவர்கள் அந்த பத்திரிகை ஆபீசிற்கு டெலிபோன் செய்து கேட்டனர்.

அந்த பத்திரிகையில் வெளிவந்த செய்தி விவரம் வருமாறு..

தமிழ்நாடு, கர்நாடகம், ஆந்திரா மற்றும் பாண்டிச்சேரி ஆகிய மாநிலங்கள் இந்தியாவிலிருந்து பிரிக்கப்பட்டு தனிநாடாகியது. இதற்கு "தென்னிந்தியக் குடியரசு" என்று பெயர் வைக்கப்பட்டுள்ளது.

இந்தத் தென்னிந்தியக் குடியரசு நாட்டிற்கு முன்னாள் ஜனாதிபதி சஞ்சீவ ரெட்டி ஜனாதிபதியாக இருப்பார்.

இவ்வாறு அந்த செய்தி வெளியிடப்பட்டிருக்கிறது.

இந்த செய்தி பம்பாய் நகரையே பரபரப்பில் ஆழ்த்தியது. பத்திரிகையை படித்த மக்கள் அது உண்மையாக இருக்குமா என்பதை தெரிந்து கொள்ள அந்த பத்திரிகை ஆபீசிற்கு போன் மூலம் தொடர்பு கொண்டு விசாரித்தனர்.

இச்செய்தி பம்பாய் எங்கும் பரவியது. பஸ்கள், ரயில்கள் எங்கு பார்த்தாலும் மக்களிடையே அந்த பேச்சு தான்.

ஆனால் கடைசியில் தான் இந்த செய்தி வெறும் வேடிக்கை என்றும், முட்டாள் தினத்தை முன்னிட்டு வாசகர்களை ஏமாற்றுவதற்காக இவ்வாறு செய்தி வெளியிடப்பட்டிருப்பது என்றும் தெரியவந்தது.

ஆனால் இந்த செய்தியின் தலைப்பில் சிறிய எழுத்துக்களில் "முட்டாள் தினம்" என்று அச்சிடப்பட்டு இருந்தது.

இதை மக்கள் கவனிக்காமல் செய்தியை படித்ததால் இந்த கோளாறு ஏற்பட்டது.